[23rd August 1961

DEPUTY SPEAKER: I have allowed sufficient number of supplementaries on this question. Moreover, the House will have a discussion on the flood situation on Friday, the 25th August 1961. So, we shall now pass on to the next question.

*Sub-Registrar's Office*

*1341 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எத்தனை இடங்களில் சப்-ரிஜிஸ்திரார் அலுவலகங்கள் ஆரம்பிக்கப்படும்?

(இ) வடாற்காடு மாவட்டம் போளூர் தாலூகா கடலாடியில் ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI V. RAMAIAH: (அ) The question of opening the Sub-Registry offices is not linked with the Five-Year Plan.

(இ) No, Sir.

SRI S. M. ANNAMALAI: பல இடங்களில் சப்-ரிஜிஸ்டிரார் அலுவலகங்கள் தேவை என்று மக்கள் சொல்லுகிறார்கள். சப்-ரிஜிஸ்டிரார் அலுவலகங்கள் ஆரம்பிப்பது மக்கள் ஜனத்தொகை அடிப்படையில் ஆரம்பிக்கப்படுகிறதா அல்லது விஸ்தீரணத்தைக் கொண்டு ஆரம்பிக்கப்படுகிறதா? இதைத் திட்டவட்டமாக பரிசிலனை செய்து மக்களுக்கு அதிக சிரமமில்லாமல் இருக்கும்படி அதிக தூரம் வராதபடி மக்கள் ஜனத்தொகையின் அடிப்படையில் புது அலுவலகங்கள் ஆரம்பிக்க ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI V. RAMAIAH: புது சப்-ரிஜிஸ்டிரார் ஆபீஸ்கள் திறப்பதிலே சமீப காலம் வரைக்கும் கொஞ்சம் தேக்கம் இருந்தது. ஆனால் இந்த வருஷ ஆரம்பத்திலிருந்து மக்களுடைய தேவையை பூர்த்தி செய்யக்கூடிய முறையில் புது நிலையங்கள் திறக்கப்படவேண்டும் என்று முடிவு எடுத்து, இந்த வருஷம் 2, 3 ஜில்லாக்களில் 5, 6 புது ஆபீஸ்கள் திறந்திருக்கிறோம். ஆகையால் இனிமேல் தொடர்ந்து எங்கே தேவை இருக்கிறதோ அதை பூர்த்தி செய்யக்கூடிய முறையில் நடவடிக்கை எடுக்கப்படும்.

*Clash between students and transport workers*

*1342 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னையில் பஸ் தொழிலாளர்களுக்கும் கல்லூரி மாணவர்களுக்கும் கைகலப்பு சச்சரவு ஏற்பட்டு பஸ் போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டதா?

(இ) இதற்கு காரணமென்ன?

(உ) எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

23rd August 1961]

THE HON. SRI R. VENKATARAMAN: (அ) The running of the Madras State Transport services was not paralysed.

(இ) & (உ) However, as a result of some altercations between certain college students and conductors on 2nd and 3rd February 1961, the drivers and conductors had certain apprehensions in their minds on 4th February 1961 and could therefore take out the buses for passenger traffic only at 7-30 a.m. that day, after considerable persuasion.

SRI M. KALYANASUNDARAM: மாணவர்களுக்கும், கண்டக்டர்களுக்கும் இம்மாதிரி ஒரு தகராறு ஏற்படுவதற்குக் காரணம் மாணவர்களுக்கு போதிய பஸ் வசதி இல்லை என்பதுதானா? அப்படியானால் அவர்களுக்கு பஸ் வசதியை அதிகரிப்பதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN: மாணவர்கள் காலேஜ் போவதற்கு 14 பஸ்கள் போட்டிருக்கிறோம். சர்க்கார் பஸ் நடத்துகிற எந்த தேசத்திலும் இம்மாதிரி மாணவர்களுக்கு ஸ்பெஷல் பஸ் வசதி கிடையாது. இது ராத்திரி சினிமாவுக்கு போகும்பொழுது ஏற்பட்டது என்று நினைக்கிறேன். (சிரிப்பு). அதற்கு நாம் பஸ்கள் தயார் செய்வது என்று சொன்னால் கஷ்டம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI K. VINAYAKAM: Is it not a fact that this clash between the students and the conductor arose not on account of paucity of buses, but on account of the silly behaviour on the part of both the parties concerned?

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, Government do not express opinions.

*Tahsildar (Pattukottai)*

DEPUTY SPEAKER: As the hon. Member who gave notice of question No. 1343 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*1343 Q.—SRI A. R. MARIMUTHU: கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா கலெக்டரிடமிருந்து பட்டுக்கோட்டை தாலுக்காவிற்கு ஒரு அசைன்மெண்ட் தாசில்தார் நியமனம் செய்யப்படவேண்டும் என்று கோரிக்கை வந்ததா? என்ன செய்யப்பட்டது?

THE HON. SRI M. A. MANICKAVELU: No, Sir.